Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (C) P.P. 55



**மகிழ்ச்சி**

பாடுபடும் உழவர்களுக்கு நிலம் சொந்தமானால் அவர்கள் நிமிர்ந்து நடப்பார்கள் அவர்களின் நெஞ்சத்தில் மகிழ்ச்சி ஏற்படும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**தமிழ்**

நல்ல தமிழின் இயற்கை எழில்களையும் தமிழரின் வீரத்தையும் தமிழ் நாட்டுப் பற்றையும் எடுத்துக்காட்டும் பாட்டுகளையே பாடுமாறு செய்யவேண்டும்.

தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 22 - 5 - 1984 செவ்வாய் ⁂ வெளியூர்: 23 - 5 - 1984 புதன் இதழ்: 215

# அக்டோபர் மாதத்திற்குள் 91 நகராட்சிகள் மற்றும் மாநகராட்சிகளுக்கு தேர்தல்

## அமைச்சர் குழந்தைவேலு தகவல்

### கள்ள ஓட்டைத் தடுக்க வாக்காளர்களுக்கு புகைப்படத்துடன் கூடிய அடையாள அட்டை வழங்கத் திட்டம்

**சென்னை, மே 22- வரும் அக்டோபர் மாதத்திற்குள் தமிழகத்தில் உள்ள 3 மாநகராட்சிகள், மற்றும் 91 நகராட்சிகளுக்கு தேர்தல் நடத்தப்படும் என அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.**

கள்ளஓட்டு போடப்படுவதைதடுக்க வாக்காளர்களுக்கு புகைப்படத்துடன் கூடிய அடையாள அட்டை வழங்கவும் திட்டமிடப்பட்டுள்ளதாகவும் அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

தமிழக உள்ளாட்சித் துறைஅமைச்சர் குழந்தைவேலு சென்னை கோட்டையில் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது:

நகராட்சி மாநகராட்சி தேர்தல்கள்வரும் அக்டோபர் மாதத்தில் நடத்த இருக்கிறோம்.

இதற்காக இந்த தேர்தலில் வாக்களிக்கும் வாக்காளர்களுக்கு அவரவர் புகைப்படம் ஒட்டிய அடையாள அட்டைவழங்சப்பட உள்ளது

தபால் கார்டில் பாதி அளவு உள்ள அடையாள அட்டையில் வாக்காளர்களின் சிறிய அளவில் (ஸ்டாம்ப் சைஸ்) புகைபடம் ஒட்டப்பட்டு அவர்களின் பெயர், முகவரி, வயது போன்றவை குறிக்கப்பட்டிருக்கும்.

இந்த அடையாள அட்டை ஒரு பிளாஸ்டிக் கவருக்குள் வைக்கப்பட்டு சேதம் ஏற்படாத வகையில் நான்குபக்கமும் ஒட்டப்பட்டிருக்கும்.

மாநகராட்சி, நகராட்சி பகுதிகளில் கள்ள ஓட்டுக்கள் அதிகமாக போடப்படுவதாக புகார்கள் எழுகின்றன.

#### புகார்களுக்கு இடமிருக்காது

எனவே இத்தகைய முறையைகடைபிடித்தால் அத்தகைய புகார்களுக்கு இடமிருக்காது என்று அரசு கருதுகிறது.

மாநகராட்சி, நகராட்சி தேர்தல்களில் வாக்களிக்கக்கூடிய வயதை அடைந்த 18 வயதுக்கு மேல் உள்ளவர்கள் 60 லட்சம் பேரிருக்கிறார்கள்.

இவர்களுக்கு வழங்கப்படும் அடையாள அட்டை புகைப்படம் போன்றவற்றைஅரசுசெலவிலேயே வழங்கப்படும்.

இதற்காக 1 கோடியே 25 லட்ச ருபாய் செலவு ஆகலாம்.

ஆகஸ்டு மாதத்திற்குள் இந்தபணி முடிவடையும்.

மதுரை மாநகராட்சியின் பதவிக் காலம் ஜூலை மாதத்தில் முடிவடைகிறது. எனவே சென்னை, மதுரை, கோவை ஆகிய மாநகராட்சிகள் மற்றும் 91 நகராட்சிகள் தேர்தலை அக்டோபர் மாதத்தில் நடத்த அரசு கருதியுள்ளது.

#### அரசு மனு

பஞ்சாயத்து தேர்தலுக்கு நீதிமன்றம் விதித்திருக்கும் தடையை நீக்குமாறு அரசு மனுச் செய்துள்ளது.

இப்போது விடுமுறையில் உள்ள நீதிமன்றம் விடுமுறைக்காலம்முடிந்து திறக்கப்பட்டவுடன் தடை நீக்குவது பற்றி அரசு செய்துள்ள மனு மீது முடிவை எதிர்பார்க்கிறோம்.

அதன் பிறகு தேர்தல் பழைய முறையிலே நடத்துவதா? புதிய முறையில் நடத்துவதா என்பது பற்றி தெரியும்.

நகராட்சி தேர்தலுக்

(2-ம்பக்கம்பார்க்க



## 14 கட்சி கூட்டணியால் தலை தப்பிய தி.மு.க.

சென்னை, மே, 22- நடந்து முடிந்தஇடைத் தேர்தலில் இந்த தடவை 14 கட்சிகளில் கூட்டணியயில் திமுக தேர்தலை சந்தித்தது.

முதல்வர் புரட்சித் தலைவரை கருணாநிதி வெளியேற்றிய பிறகு எந்த இடைத் தேர்தலிலும் கருணாநிதி கட்சியினர் வெற்றிபெறவில்லை.

திண்டுக்கல் இடைத் தேர்தல், கோவை மேற்கு இடைத்தேர்தல், பெரியகுளம் இடைத்தேர்தல், திருச்செந்தூர் இடைத்தேர்தல் எல்லாமே தி.மு.க. வுக்கு தோல்வி தான.

பாராளுமன்ற தேர்தல்நடந்தபோது இந்திரா காங்கிரசோடு சேர்ந்து திமுக மஞ்சள் குளித்து விட்டது.

பிறகு சட்டசபை தேர்தலில் திமுக எதிர்க்கட்சியாகியது.

அதன்பிறகு அந்த எதிர்ககட்சி பதவியும் திமுகவுக்கு பறிபோன நிலை ஏற்பட்டது. ராஜினாமா நாடகம் நடத்திவிட்டு அன்பழகனை நடுதெருவில்நிறுத்திவிட்டார்

பிறகு திடீரென்று மேலவைக்குச் சென்று எதிர்கட்சித் தலைவர் பதவியைப் பெற்றுவிடலாம்என்று எம். எல். சி ஆனார்.

பாவம் கருணாநிதி அந்த இடத்தையும் அவரால் பிடிக்கமுடியவில்லை

14 கட்சி கூட்டணி துணையோடு இந்த இடைத் தேர்தலில் கருணாநிதி இறங்கினார்,

4தொகுதி இடைத்தேர்தலில் கழக அணிஇரண்டு இடங்களைப்பெற்று இருக்கிறது.

ஆனால் திமுக 14 கட்சி துணை இருந்த காரணத்தால் இருந்த3 இடங்களில் இரண்டைப் பெற்று தலைதப்பியிருக்கிறது.

இந்த 14 கட்சி கூட்டணி இல்லாமல் திமுக தனித்துநின்று இருந்தால் திமுக கதி......

அதோகதிதான் ஆகியிருக்கும். இப்போது 14 கட்சி கூட்டணி தயவால் தலைதப்பியிருக்கிறது.

**என்னுடைய வெற்றி**

# புரட்சித்தலைவரின் சத்துணவு திட்டத்திற்கு கிடைத்துள்ள வெற்றி

## உப்பிலியாபுரம் சரோஜா பேட்டி

**உப்பிலியாபுரம், மே 22- உப்பிலியாபுரம் தொகுதியில் கழக வேட்பாளராக போட்டியிட்டு அமோக வெற்றி பெற்ற சரோஜா 'என்னுடைய வெற்றி புரட்சித்தலைவரின் சத்துணவு திட்டத்திற்கு கிடைத்துள்ள வெற்றி' என்று பெருமிதத்துடன் கூறியுள்ளார்.**

உப்பிலியாபுரம் தொகுதியில் கழகவேட்பாளராகவும், தாய்க்குல பிரதிநிதியாகவும் போட்டியிட்டு அமோக வெற்றி பெற்றுள்ள ஆர். சரோஜா நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:—

என்னுடைய வெற்றி புரட்சித்தலைவர் அமுல்படுத்திவரும் சத்துணவு திட்டத்திற்கு கிடைத்த வெற்றி உப்பிலியாபுரத்தில் பெருவாரியான வாக்குவித்தியாசத்தில் மக்கள் என்னை வெற்றி பெறச் செய்தது எந்த அளவிற்கு சத்துணவு திட்டத்தை வரவேற்கிறார்கள் என்பதற்குச் சான்று

என்னுடையவெற்றிக்கு பாடுபட்ட அனைவருக்கும் என்நன்றி காணிக்கையினை தெரிவித்துக்கொள்கிறேன்.

சத்துணவுத் திட்டம் சிறப்பாக நடைபெறவும், தாய்மார்கள் மேம்பாட்டிற்காகவும் புரட்சித் தலைவரின் ஆணைப்படி என்னால் முடிந்த பணிகளை செய்வேன்.

இதுவரை எந்த அரசும் செய்யாத அளவு பெண்கள் மேம்பாட்டிற்காகவும், நலிவுற்றோர்வாழ்வு மேம்படவும் புரட்சித் தலைவர் அரசு திட்டங்களைத் தீட்டி வருகிறது. புரட்சித தலைவரின ஆட்சிகாலம் ஏழை எளிய மக்களின் தாய்மார்களின் பொற்காலம் என்றால் மிகையாகாது. என்னைப் போன்ற சாதாரண குடும்பத்துப் பெண அதுவும் ஏழ்மையிலேயே உழன்ற என்போன்றோர் சட்டமன்றத்திற்குசெல்லுவதென்பது புரட்சித் தலைவர் ஆட்சியில மட்டுமே நடக்கக கூடிய சாதனை அநத அளவிற்கு ஏழை எளிய மக்களுக்காக புரட்சித் தலைவர் தொண்டாற்றிவருகிறார்.

என்னை இந்தத் தொகுதி சட்டமன்ற உறுப்பினராக தேர்ந்தெடுத்த மக்களுக்கு கட்சி மாச்சரியமின்றி கடமையாற்றுவேன் என்னை எந்த நோக்கத்திற்காக மக்கள் சட்டமன்றத்திற்கு அனுப்புகிறார்களோ அநத எண்ணத்தை நிறைவு செய்யும் வகையில் பணியாற்றுவேன என்னுடையவெற்றி முழுக்க முழுக்க புரட்சித் தலைவரது வெற்றி.

என்னுடைய தொகுதியில் ஒவ்வொரு ஒன்றியத்திலும் ஒவ்வொரு அலுவலகம் அமைத்து மக்களை நேரில் சந்தித்து அவர்கள குறைகளைக் கேட்டு தீர்த்துவைப்பேன்.

இவ்வாறு சரோஜா கூறினார்.

முன்னதாக ஓட்டு

(2-ம் பக்கம் பார்க்க)

**குடிசைவாசிகள் வீடுகட்டிக்கொள்ள**

# புதிய திட்டம்

## கழக அரசு நடவடிக்கை

**சென்னை, மே 22. குடிசைவாசிகள் வீடுகளைக் கட்டிக் கொள்ள ரூ. 10ஆயிரம்முதல் 12ஆயிரம் வரைவழங்கப்படும் இதற்காக ஒரு புதிய திட்டம் தமிழகத்தில் அமலாக்கப்படும் என்று மத்திய அரசு அதிகாரி தெரிவித்தார். தமிழக வீட்டுவசதிப் பணிகளை இவர் மிகவும் புகழ்ந்து பாராட்டினார்,**

வீட்டு வசதி மற்றும் நகர்ப்புற அபிவிருத்தி கழகத்தின் தலைமை அதிகாரி முல்க்ராஜ் இன்று தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்தில் நடைபெற்ற நிருபர் கூட்டம் ஒன்றில் பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

இந்தியாவிலேயே தமிழ்நாடு வீட்டுவசதி வாரியம் சிறப்பான முறையில் பணியாற்றி வருகிறது. திட்டங்களை செயல் படுத்துவதிலும் குறித்த காலத்திற்குள்ளாகவே வீடுகளை கட்டி முடிப்பதிலும் நாட்டின் முதன்மையான இடத்தை தமிழக வீட்டு வசதி வாரியம் பெற்றிருக்கிறது அதற்காக தலைவர் மற்றும் அதிகாரிகளை பாராட்டுகிறேன்.

நடுத்தர மற்றும்பொருளாதாரத்தில் நலிவுற்ற மக்களுக்கு வீடுகளைக் கட்டித்தருவதிலும் தமிழக வீட்டுவசதி வாரியம் சிறந்த முறையில் பணியாற்றுகிறது. அகில இந்திய வீட்டு வசதி அபிவிருத்தி சங்கத்தின் துணைத்தலைவராக தமிழக வீட்டு வசதி வாரியத் தலைவர் ஏ. செல்லையா இருந்து வருகிறார். ஹட்கோ நிறுவனமும் இந்த வீட்டு வசதி அபிவிருத்தி சங்கம் ஆகியவை போன்று ஒரு புதிய திட்டத்தை செயல படுத்த இருக்கிறது. அதன்படி குடிசைப் பகுதியில் உள்ள மக்கள் தாங்களாகவே தங்கள் வீடுகளைக்கட்டிக் கொள்ள அதிக பட்சம் ரூ10 ஆயிரம்முதல்12 ஆயிரம வரை வழங்கப்படும். இதற்கான உதவி மற்றும் தொழில் நுட்ப வசதிகள ஆகியவற்றையும் இந்த சங்கம் செய்து தரும்.

இதற்காக ஐதராபாத்திலுள்ள ஹட்கோ பிரிவை சேர்ந்த ராஜகோபாலாச்சாரி என்பவரும் கண்காணிப்பு வேலைகளை பார்த்துக் கொள்வார்.

இந்த புதிய திட்டப்படி தமிழகத்தில் முதன்முதலாக 150 வீடுகள் கட்டப்படும், படிப்படியாக இந்த திட்டம்விஸ்தரிக்கப்படும்.

#### மாமல்லபுர மாநாடு

இந்த திட்டத்தை மேலும்விஸ்தரிப்பதுபற்றியும் பொது மக்களுக்கு இதன் மூலம் எந்த வகையில் நன்மை கிடைக்க செய்யலாம் என்பது பற்றியும் ஆலோசிக்க நாளை (23-ந் தேதி மாமல்லபுரத்தில் மாநாடு நடைபெறுகிறது. தமிழக வீட்டுவசதி வாரிய சார்பில் இந்த மாநாடு நடைபெறும்

இந்த மாநாட்டில் பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த 35 பிரதிநிதிகள் கலந்து கொளகிறார்கள் தமிழ்நாடு குடிசைமாற்று வாரியத் தலைவர் சுலோசனா சம்பத் மற்றும் பல அதிகாரிகள் கலந்து கொள்கிறார்கள்.

இவ்வாறு முல்க்ராஜ் கூறினார்.

இந்த கூட்டத்தில்வாரிய தலைவர் ஏ. செல்லையா, தலைமை பொறியாளர் சாஸ்திரி, கண்காணிப்பு பொறியாளர் குமரேசன், ஐதராபாததை சேர்ந்த ராஜகோபாலாச்சாரி (ஹட்கோ பிரிவு அதிகாரி) ஆகியோரும் கலந்து கொண்டனர்,

# அண்ணா நகரில் கருணாநிதியின் கள்ள ஓட்டு அரசியல் வென்றது

சென்னை, மே. 22- அண்ணாநகர் தொகுதியில் கருணாநிதி கட்சியினர் நடத்திய கள்ள ஓட்டு அரசியல் வெற்றி பெற்றிருக்கிறது

அண்ணாநகர் தொகுதியில் கருணாநிதி கட்சியினர் அடியாட்களையும் குண்டர்களையும் இறக்குமதி செய்து வன்முறைக்கு திட்டமிட்டு கள்ள ஓட்டுக்கும் பெரும் அளவில் திட்டமிட்டு செயல்பட்டனர்.

பல ஆயிரம் பேர்களை கள்ள ஓட்டுப்போட தி.மு.க.வினர் திட்டமிட்டு ஏற்பாடு செய்தனர்

கள்ள ஓட்டுப் போட என்றே ஆட்களை நகரின் பல இடங்களில் இருந்தும் வெளியில்இருந்தும்திரட்டி வைத்து கள்ள ஓட்டுப் போட்டனர்.

திமுகவினரின் கள்ள ஓட்டுதிட்டம் கழகத்தின நியாயமான நேர்மையான தேர்தல் வேலையை பின்னடைய வைத்துள்ளது.

அண்ணாநகரில் திமுக பெற்ற வெற்றி கள்ள ஓட்டின் வெற்றி.

அதர்ம வெற்றி கழகம் தோல்வி அடைந்தது என்றால் அது தர்மத்தின் தோல்வி.

தர்மத்தின் வாழ்வு தன்னை சூது இப்போது கல்வியது மறுபடியும் தர்மம் வெல்லும் புரட்சித் தலைவரது தர்ம அரசியல் நிச்சயம் வெல்லும்.

## சென்னையில் அனல்காற்று: 105.5 டிகிரி கடும்வெயில்

சென்னை, மே 22— சென்னை நகரில் இன்று அனல் காற்று வீசியது வெயிலின் கொடுமை அதிகமாக இருந்தது.

நுங்கம்பாக்கம வானிலை ஆராய்ச்சி நிலையத்தில் பதிவான அதிகபட்ச அளவு 105.5 டிகிரியாகும்.

இந்த அக்னி நட்சத்திர சீசனில் இன்றைய வெயிலே மிக உயர்ந்த பட்சமாகும்.

⁕

**இன்று இரவு**

## வானொலி, டி. வி. யில் பிரதமர் பேசுகிறார்

புதுடெல்லி, மே. 22- பிரதமர் இந்திரா இன்று இரவு வானொலி மற்றும் டி. வி. யில். உரை நிகழ்த்துகிறார். இந்தியா முழுமைக்கும் உள்ள வானொலி டி. வி. நிலையங்கள் பிரதமரின் இந்த பேச்சை அஞ்சல் செய்கின்றன.

அணு ஆயுதங்களை உற்பத்தி செய்துகுவித்து அணு ஆயுதப் போட்டி நடத்தி வரும் நாடுகள் இதைதடுக்கவும் அணுஆயுத போட்டியை தவிர்க்குமாறு பிரதமர் வேண்டுகோள் விடுக்கிறார்.

# தஞ்சையில் கழக அணி நடத்திய ஊர்வலம்

தஞ்சை,மே.22-தஞ்சை தொகுதியில், கழக அணி வேட்பாளர் அய்யாறு வாண்டையார் வெற்றி பெற்றது தெரிந்ததே.

இதையடுத்து கழகத் தோழர்கள் மற்றும் இந்திரா காங்கிரஸ் கட்சியினர் தஞ்சை நகரின் பல்வேறு பகுதிகளில் ஊர்வலம் நடத்தினர்.

ஆங்காங்கே வெற்றியை கொண்டாடும் வகையில் வெடிகள் வெடிக்கப்பட்டன.

## சட்டமன்ற இடைத்தேர்தலின் முடிவு

# லாபம் கழக அணிக்கு: நட்டம் திமுகவுக்குத்தான்

சென்னை, மே 22- தமிழக சட்டமன்ற தொகுதிகள் நான்கிற்கு இடைத் தேர்தல் நடந்து முடிந்துள்ளது

முடிவுகள் அறிவிக்கப்பட்டுவிட்டன,

இந்த தேர்தல் முடிவில் லாபம் கழக அணிக்குத்தான். திமுகவுக்கு நட்டம்தான்.

நடந்த 4 தொகுதி இடைத்தேர்தலில் ஒரு தொகுதிதான் கழகத்திடம் இருந்தது. மற்ற 3 தொகுதியும் திமுக வெற்றி பெற்ற தொகுதிகள். உப்பிலியாபுரம் தொகுதி ஒன்றுதான் கழகத்தின் வசம் இருந்தது,

தஞ்சாவூர், உப்பிலியாபுரம், அண்ணாநகர், ஆகிய 3 தொகுதிகளிலும் திமுக வெற்றி பெற்ற தொகுதிகள்.

முடிவுகள் வந்ததில் தனது தொகுதியான உப்பிலியாபுரம் தொகுதியில் கழகம் மிகப்பெரிய அளவில வெற்றிவாகை சூடி உள்ளது.

தஞ்சை தொகுதிகள் திமுகவிடம் இருந்த தொகுதி. இந்த தொகுதியை கழக ஆதரவுடன் இந்திரா காங்கிரஸ் கைப்பற்றி உள்ளது.

அண்ணாநகர், மயிலாடுதுறை தொகுதிகளை திமுகதக்க வைத்துக் கொண்டு இருக்கிறது.

ஆனால் கையில் இருந்த தஞ்சை தொகுதியை திமுக இழந்துள்ளது

ஆகவே கழக அணிக்கு இந்த இடைத் தேர்தல் லாபமே தவிர நஷ்டம் அல்ல.

தஞ்சை தொகுதி கழக அணிக்கு வரவு,

திமுகவுக்கு தஞ்சை தொகுதி இழப்பு.

கையில் இருந்த 3 தொகுதிகளில இரண்டை தான திமுக கைப்பற்றியது. மூன்றையும் கைப்பற்ற முடியவில்லை.

பரங்கிமலை அருகே

# 50 வயது ஆசாமி மர்ம மரணம்

சென்னை, மே 22- பரங்கிமலை அருகே 50 வயது ஆசாமி ஒருவர் இறந்து கிடந்தார் மர்மமான முறையில் இவர் இறந்துள்ளதாக கூறப்படுகிறது.

பரங்கிமலை துளசிங்கம் புற்றுஆறு என்ற இடத்தில் இவரது உடல் கிடந்தது அருகே ஒரு சைக்கிளும் கிடந்தது.

மர்மமான முறையில் இறந்து கிடந்த இவரைப்பற்றி பரங்கிமலை போலீசார் விசாரித்துவருகின்றனர்.

## உலகெங்கும் வேலை செய்யும் போது ஏற்படும்

# விபத்துகளால் 2 லட்சம் பேர்கள் இறப்பதாக தகவல்

புதுடெல்லி. மே. 22. வேலை செய்யும்போது ஏற்படும் விபத்துக்கள் மற்றும் வேலை தொடர்பான நோய்களால் உலகம் முழுவதும் ஆண்டொன்றுக்கு சுமார் 2 லட்சம் பேர் இறக்கிறார்கள்.

பலகோடி ஆண்களும். பெண்களும் இன்று உலகம் முழுவதும தொழிற்சாலைகளில் பணியாற்றி வருகிறார்கள.

அத்தொழில்களால் ஏற்படும் பாதிப்புகளிலிருந்து தொழிலாளர்களை காப்பாற்றபெரும்பாலான தொழிற் சாலைகள் அக்கறை காட்டுவதில்லை.

உதாரணமாக டயர் தொழிற்சாலையில்வேலை பார்க்கும் தொழிலாளர்களுக்கு பெரும்பாலும் காச நோய் (டி. பி.) பாதிப்பு ஏற்படசாத்தியம உண்டு.

அதைப்போலவே அணு சக்தி தொழிற்சாலைகளில்பணிபுரிபவர்களுக்கு காலப்போக்கில் கதிர் வீச்சால் அபாயகரமான நோய்கள் ஏற்படுகின்றன.

ரசாயனத் தொழிற்சாலைகளில் பணியாற்றுபவர்களின் நிலையும் பரிதாபத்திற்கு உரியதே.

இதுபோன்ற தொழிற்சாலைகளில் பணிபுரிபவர்களுக்கு இன்னின்ன வசதிகள் செய்து தரப்பட வேண்டும் என்று உத்தரவு அமலில் உள்ளது.

இந்த உத்தரவைபெரும்பாலான தொழிற்சாலைகள் பின்பற்றுவதில்லை, கேட்டால் நாங்கள் செய்து தரும் வசதிகளை தொழிலாளர்கள் பின்பற்றுவதில்லை என்று குற்றம் சாட்டுகிறார்கள்.

பெரிய தொழிற்சாலைகளில்மட்டும் இந்த நிலை இல்லை சாதாரண சிறு தொழிற்சாலைகளிலும் இத்தகைய நிலை காணப்படுகிறது.

### இறப்பு அதிகரிப்பு

ஆபத்தான தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு உரிய பாதுகாப்பு இல்லாததாலும், செய்யும் தொழில்கள் ஏற்படுத்தும் நோய்களாலும் இன்று உலகமெங்கும் இறப்பவர்களின் எண்ணிக்கைபெருகிவருகிறது.

இப்படிஇறப்பவர்களின் எண்ணிக்கை உலகம் முழுவதும் ஆண்டொன்றுக்கு 1லட்சத்து 80 ஆயிரம் ஆகும். வேலை செய்யும்போது ஏற்படும் விபத்துகளில் காயம்பட்டு அவதிப்படுகிறவர்களின் எண்ணிக்கை 11 கோடியாகும்.

இத் தகவலை சர்வதேச தொழிலாளர் கழகம்தெரிவிக்கிறது.

இதற்கொரு பரிகாரம் உடனடியாக காண வேண்டியது அவசியம் ஆகும்.

வருகிற ஜூன் 6-ந்தேதியிலிருந்து 27-ந்தேதிவரை ஜெனீவாவில்70 வது சர்வதேசதொழிலாளர்மாநாடு நடைபெற உள்ளது,

இந்த மாநாட்டில் மேற்சொன்ன விஷயம் பற்றி விவாதிக்கப்பட உள்ளது.

இந்த விவாதத்தில் ஏற்படும் முடிவு அடுத்த ஆண்டிலிருந்து தொழிலாளர் நலனுக்கு வழிகாட்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.



பம்பாய்-பிவாண்டி கலவரப் பகுதியில்

# கதறி அழுத பெண்களுக்கு பிரதமர் ஆறுதல்

## அமைதியை நிலைநாட்ட ஒத்துழைப்பு தர வேண்டுகோள்

பம்பாய் மே. 22- பம்பாயில் கலவரம் நடந்தபகுதியில் பிரதமர் இந்திரா வந்த போது கலவரத்தினால் பாதிக்கப்பட்ட பெண்கள் கதறி அழுதனர் அவர்களுக்கு பிரதமர் ஆறுதல் கூறினார்.

வகுப்புக் கலவரம் மூண்ட பிவாண்டி, தானே பம்பாய் பகுதிகளைப் பிரதமர் இந்திராகாந்தி நேரில் சென்று பார்வையிட்டார். பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு ஆறுதல் கூறினார்.

பிரதமரைக்கண்டவுடன், கலவரத்தினால் பாதிக்கப்பட்ட பெண்கள் கதறி அழுதனர்.

அவர்களுக்கு பிரதமர் ஆறுதல் கூறினார்

கலவரத்தினால் காயம் அடைந்து ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறுபவர்களையும் பிரதமர் இந்திரா சென்று பார்த்து ஆறுதல கூறினார்.

பின்னர் நிருபர்களுக்கு அவர் ஒரு பேட்டியளித்தார். அப்போது அவர் கூறியதாவது:

இந்தியா போன்ற வளர்ந்துவரும் நாட்டில இதுபோன்ற (வகுப்பு கலவரம்) பிரச்னைகள இருக்கக்கூடாது.



யான யோசனை முதலில் அவர்கள் இந்திய குடிமக்கள, பின்னர் தான் மதத்தால் அவர்கள முஸ்லிம்கள்

இந்திய விடுதலை இயக்கத்தில் முஸ்லிம் பெருமக்களின் பங்கு சிறப்பானது கலைகளும். கைவினைகளுக்கும் அவர்கள ஆற்றிய பணியால் இந்த நாடு பெருமைப்படுகிறது.

இவ்வாறு பிரதமர் இந்திரா காந்தி கூறினார்.

கலவரத்தில் உயிர் இழந்தவர்களின் குடும்பங்களுக்கு தலா 2ஆயிரம் ரூபாய் விதம் உதவித்தொகை அளிக்க பிரதமர் உத்தரவிட்டார். இதற்காக பிரதமர் நிவாரண நிதியிலிருந்து 10 லட்ச ரூபாயை பிரதமர் இந்திரா காந்தி வழங்கினார்.

### ஒற்றுமை அவசியம்

ஏற்கனவே பல்வேறு நெருக்கடிகள் உலகை ஆட்டிப்படைத்து வருகின்றன. வளர்ந்த நாடுகளில் கூட பிரச்சினைகள இருந்து வருகின்றன.

இந்தியா போன்ற வளர்ந்துவரும் நாடுகளில் சிறுபான்மையோர் எண்ணிக்கை அதிகம் அவர்கள் பெரும்பாலும்பின் தங்கிய பகுதிகளில் வசித்து வரும் நிலை உள்ளது இத்தகைய நிலையில் அவர்கள மத. இன வேறுபாடுகளை மறந்துஒற்றுமையாகவாழ பழகிக்கொள்ள வேண்டும்.

பல்வேறு மதங்களுக்கும் பாதுகாப்பு அளிக்கஇந்திய அரசியலமைப்பு உறுதி செய்கிறது.

எனவே அமைதியை நிலைநாட்டுவதில் எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளப்பட வேண்டும் இது அரசின் கடமை என்று ஒதுங்கி விடாமல பொது மக்களும் அரசுடன் ஒத்துழைக்க வேண்டும்.

நமது ஒற்றுமையை எந்த சக்தியும் குலைக்க அனுமதிக்கக்கூடாது.

### பிரதமர் வேண்டுகோள்

நியாயவான் இருக்கும் முஸ்லிம் பெருமக்கள இந்துக்களாக நிந்து சொன்னவேண்டுமென் பது என்னுடையதாழ்மை

# சரோஜா பேட்டி

(1ம் பக்கத் தொடர்ச்சி)

விவரம் பற்றி இறுதியாக அறிவிக்கப்பட்டவுடன் சரோஜா துறையூர் பஞ்சாயத்து யூனியன் அலுவலகம் அருகிலிருந்த கழகத் தொண்டர்களுக்கும பொதுமக்களுக்கும் சாக்லெட் வழங்கி தனது மகிழ்ச்சியை தெரிவித்தார். கழகத் தொண்டர்கள் பலரும் வாழ்த்துத் தெரிவித்தனர்.

மாவட்ட கழக செயலாளர் சவுந்திரராசன், இணைச் செயலாளர் நல்லுசாமி, துறையூர் நகர செயலாளர் ராஜா, துறையூர் ஒன்றிய செயலாளர் செலவராஜ், பெரியசாமி எம் எல். ஏ. மாவட்ட இந்திரா காங்கிரஸ் செயலாளர் ராமராஜ் ஆகியோர் சரோஜாவிற்கு மாலைகள் தந்து வாழ்த்தினர். சரோஜாவுக்கு அவரது கணவர் பெருமாள் மாலை அணிவித்தார்.

அங்கிருந்து ஊர்வலமாக சென்று பஸ் நிலையம் அருகிலுள்ள அண்ணா சிலைக்கு சரோஜா மாலை அணிவித்தார்.

உப்பிலியாபுரம் தொகுதியில் அதிக வாக்குகள வித்தியாசத்தில் வெற்றி பெற்று சாதனைபடைத்ததற்கு எதிரான சதிகார கும்பலை புறமுதுகிட்டு ஓடச்செய்த சரோஜா முதலவர் புரட்சித் தலைவரை சந்தித்து ஆசி பெறவுள்ளார்.

# பீகாரில் இந்திரா காங்கிரஸ் வெற்றி

பாட்னா, மே. 22- பீகார்மாநிலம்,ருசைத்பூர் சட்டமன்ற தொகுதியில் நடந்த இடைத்தேர்தலில் இந்திரா காங்கிரஸ் கட்சி வேட்பாளர் விவேகானந்த்கிரி வெற்றி பெற்றார்.

ஒட்டு விவரம் வருமாறு:

விவேகானந்த்கிரி [இ. காங்] 27,730

கிஷோர்சாகி [ஜனதா] 16,280

கொலபிரா தொகுதி முடிவு அறிவிக்கப்படவில்லை.

அண்ணாவில் விளம்பரம் செய்து பயன் பெறுங்கள்

## மத்திய அமைச்சர் பேச்சு

# ஆயிரம் ரூபாய்க்கு தொலைக்காட்சி பெட்டிகள் கிடைக்கும்

பெங்களூர், மே 22- ஆயிரம் ரூபாய்க்கு கறுப்பு வெள்ளை தொலைக்காட்சிப் பெட்டிகள் விரைவில் கிடைக்கும் என்று மத்திய அமைச்சர் தெரிவித்தார்.

பெங்களூரில் நடந்த விழா ஒன்றில் மத்திய அரசின் துணை அமைச்சர் எம் எஸ் சஞ்சீவிராவ் கூறியதாவது:—

கிராமங்களிலும், நகரங்களிலும் தொலைக்காட்சி பெட்டிகளின தேவை அதிகரித்து வருகிறது. இந்த தேவைகள் கவனிக்கப்படவேண்டும்.

கிராமப்புற - நகர்ப்புற மக்களது தேவையை பூர்த்திசெய்யும் வகையில் கறுப்புவெள்ளை தொலைக்காட்சிப்பெட்டிகள் ரூ. 1000க்கு விரைவில் கிடைக்கும்,

இப்படிப்பட்ட மலிவு விலைப்பெட்டிகளை ஏற்கனவே சில நிறுவனங்கள தயாரிக்கின்றன.

ரூ. 1250க்கு இத்தகைய பெட்டிகளை விற்கிறார்கள்.

பிரதமர் இந்திராகாந்தி இதற்காக தீவிர திட்டத்திற்கு வழிவகை செய்து வருகிறார்.

பெல் நிறுவனம் இதற்கான ஏற்பாடுகளை செய்து உதவி வருகிறது.

கல்வி வளர்ச்சிக்கு தொலைக்காட்சி வசதி மிகவும் தேவை என்று பிரதமர் கருதுகிறார்.

நாட்டிலஉள்ள12கோடி பள்ளிக் குழந்தைகளுக்கு இப்படிப்பட்ட கல்விவசதி தேவைப்படுகிறது.

தொலைக்காட்சி பெட்டிகளின் தேவைகளில் உற்பத்தியாளர்கள கவனம் கொள்ளாது இருப்பதுவருந்தத்தக்கது.

கடந்த ஆண்டு நமது நாட்டின் தேவை 17 லட்சம் பெட்டிகள் ஆனால் உற்பத்தியானது 5.7 லட்சம் பெட்டிகள்தான்.

இவ்வாறு மத்திய அமைச்சர் சஞ்சீவிரால் கூறினார்.

# லாரி மோதி ஒருவர் சாவு

சென்னை, மே. 22— தாம்பரம் அருகே லாரி மோதி 50 வயது ஆசாமி ஒருவர் இறந்துள்ளார். அவரது பெயர் மாரியப்பன் தாம்பரத்தில் கூலி வேலை செய்பவர்.

சாலையைக் கடக்கும் போது அவர் மீது லாரி மோதி அந்த இடத்திலேயே மரணம் அடைந்தார். லாரி டிரைவர் கைது செய்யப்பட்டார்.

## தமிழ்நாட்டில் ஒரே வாரத்தில்

# 40 ஆயிரம் பேருக்கு 8 கோடி ரூபாய் கடன் உதவி அளிப்பு

## மத்திய துணை அமைச்சர் பூஜாரி தகவல்

நாகர்கோவில், மே. 22. தமிழ்நாட்டில் இந்த வாரத்தில் 40 ஆயிரம் பேர்களுக்கு சுயவேலை வாய்ப்பிற்காக 8 கோடி ரூபாய் வழங்கப்பட்டுள்ளதாக மத்திய நிதித்துறை துணையமைச்சர் ஜனார்தன்பூஜாரி கூறினார்.

நாகர்கோயிலில், சுய வேலைவாய்ப்புத் திட்டத்தின் கீழ் தேசியமயமாக்கப்பட்ட பாங்குகள் சார்பில் கடன் உதவி வழங்கும் விழா நடந்தது.

இந்த விழாவில், மத்திய துணை நிதியமைச்சர் ஜனர்த்தன் பூஜாரிகலந்து சொண்டு கடன்களை வழங்கினார்.

நிகழ்ச்சியில் பேசுகையில் அமைச்சர் பூஜாரி கூறியதாவது:—

ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டத்தின்கீழ் தமிழ்நாட்டில் ஏராள மானவர்கள் உதவி பெற்றுள்ளனர்

தமிழ்நாட்டில் மட்டும் இந்த வாரத்தில் 40 ஆயிரம் பேருக்கு சுமார 8 கோடி ரூபாய் கடன் உதவி வழங்கப்பட்டுள்ளது.

6-வது ஐந்தாண்டுதிட்ட காலத்தில இந்தியா முழுவதிலும் 30 லட்சம் குடும்பங்களுக்கு சுமார் 3 ஆயிரம் கோடி ரூபாய் கடனாக வழங்க திட்டமிடப்பட்டுள்ளது. சுமார் 1500 கோடிரூபாய் மான்யமாக வழங்கப்படவும் திட்டமிடப்பட்டுள்ளது.

நலிந்த பிரிவினர் சுயவேலை வாய்ப்பிற்காக மத்திய மாநில அரசுகள் பல்வேறு உதவிகள் செய்துவருகின்றன.

தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் மூலம் தொடர்ந்து கடனுதவிகள் வழங்கபடும்.

இவ்வாறு அமைச்சர் ஜனார்தன் பூஜாரி கூறினார்.

திருநெல்வேலி, திருச்செந்தூர் ஆகிய இடங்களிலும் கடன் உதவி வழங்கும் விழாக்கள் நடைபெற்றது.

# அமைச்சர் குழந்தைவேலு தகவல்...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

கும் தடை விதிக்கப்பட்டுள்ளது. அந்த தடையை நீக்கக்கோரியும் உயர்நீதி மன்றத்தில் மனு செய்து இருக்கிறோம்.

விடுமுறை முடிந்து நீதி மன்றம் திறக்கப்பட்டவுடன் நகராட்சி தேர்தலுக்கான தடை நீக்க மனு மீதுநீதிமன்றத்தின் தீர்ப்பை எதிர்பார்க்கிறோம்.

அந்த தீர்ப்பு கிடைத்தவுடன் நகராட்சிதேர்தலையும் அக்டோபரில் நடத்திட வேண்டும் என்று அரசு விரும்புகிறது.

ஆனால் மாநகராட்சி தேர்தல்கள் அக்டோபர் மாதத்தில் நடைபெற்றுதீரும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு தெரிவித்தார்.



# மயிலாடுதுறையில் கருணாநிதி கட்சியின் வன்முறை அரசியல் வென்றது

மயிலாடுதுறைமே 22- மயிலாடுதுறை தொகுதியில் திமுக குண்டர்கள காலிகளின் வன்முறை அரசியல் வெற்றி பெற்று இருக்கிறது.

இந்த தொகுதியில் தேர்தல் பிரச்சார வேலையை திமுகவினர் வன்முறை வெறியாட்ட அரசியலாகவே நடத்தினர்.

பயங்கர ஆயுதங்கள் திமுக தேர்தல் அலுவலகங்களிலும் திமுகவினர் கார்களிலும்சர்வசாதரணமாக விளையாடின.

கழகத்தினர் மீது வன்முறை தாக்குதல்கள அங்கு இங்கு என்றில்லாமல் எங்கும் நிறைந்து நடந்தது.

கழக எம் எல் ஏ யை திமுகதுப் போட்டு அடிக்கதனர். கழகத்தினரை கத்தியால் குத்தினர். பல இடங்களில் இப்படி வன்முறை தாக்குதல்கள் நடந்தன.

தி. மு க. நகர செயலாளர் காரில் பயங்கர ஆயுதம் பறிமுதல் செய்யப்பட்ட செய்தியும் வந்தது.

கருணாநிதி கட்சியின் குண்டர்கள சாம்ராஜ்யம் நடத்திய அரசியல்- பொய் பிரசாரம் வென்றுள்ளது.

புரட்சித்தலைவரது நியாயத்தையும், நேர்மையும் தர்மத்தையும் தங்களுக்கு கிடைத்த சாதகமாக தி. மு. க. குண்டர்கள் பயன்படுத்திக் கொண்டுள்ளனர்.

வன்முறை அரசியல் நிலைக்காது இது வரலாறு சொல்லும் உண்மை.

கழக ஆதரவுடன்

# தஞ்சை தொகுதியில் இந்திரா காங்கிரஸ் வெற்றி பெற்றது

## இருந்த இடத்தை தி. மு. கழகம் இழந்தது

தஞ்சாவூர், மே. 22- தஞ்சாவூர் சட்ட மன்ற தொகுதி இடைத் தேர்தலில் கழக ஆதரவுடன் போட்டியிட்ட இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் அய்யாறுவாண்டையார் வெற்றிபெற்றார்.

13 ஆண்டு காலம் தி.மு.க. தொகுதியாக இருந்து வந்த இந்த தொகுதியை தி.மு.க இப்போது இழந்துவிட்டது.

தஞ்சாவூர் சட்டசபை தொகுதிக்கான வாக்குகள் எண்ணிக்கை நேற்று நடந்தது.

நேற்று மாலை அய்யாறு வாண்டையார் வெற்றி பெற்றதாக அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டது.

## வாக்கு விவரம்

மொத்த வாக்குகள். 1,35,324
பதிவானவை 1,04,599
செல்லாதவை 1,289
அய்யாறு வாண்டையார் (இந்திரா காங்கிரஸ்) 54,180
தங்கமுத்து (தி. மு. க.) 47,910
கிருஷ்ணன் (சுயே) 765
சிங்காரவேலு (சுயே) 455

இந்த தொகுதியில் 1971 முதல் தி.மு.க.வைச் சேர்ந்த நடராசன்வெற்றி பெற்று வந்தார்.

தி.மு.க வின் கோட்டையாகஇருந்த இந்தத் தொகுதியை இப்பொழுது தி மு க இழந்துள்ளது கழகஆதரவுடன் இந்திரா காங்கிரஸ் வென்றுள்ளது

தி. மு. க வேட்பாளர் தங்கமுத்துவை விட கழக ஆதரவுடன் போட்டியிட்ட இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் அய்யாறு வாண்டையார் 6,270 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றார்.



## மயிலாடுதுறை தொகுதி: முடிவு விவரம்

மயிலாடுதுறைமே 22- மயிலாடுதுறை சட்ட மன்ற தொகுதியில்வாக்குகள்எண்ணிக்கை நேற்று நடந்தது.

மொத்த வாக்காளர் 1,16,879
பதிவானவை 93,440
செல்லாதவை 1,327
சத்தியசீலன் (தி. மு. க) 46,113
தம்பி பாலவேலாயுதம் (கழகம்) 44,333
ராஜேந்திரன் (பாரதிய ஜனதா) 1025
கோவிந்தராஜன் (சுயே) 222
ராஜாராமன் (சுயே) 163
சீதாவாசன் (சுயே) 143
குஞ்சு (சுயே) 114

இந்த தொகுதியில் கழகம் 1780 வாக்குகள்வித்தியாசத்தில் வெற்றி வாய்ப்பை இழந்தது.

பெரியாறு - வைகை பாசனத் திட்டம்.

# 350 லட்சம் டாலர் கடன்: சர்வதேச சங்கம் ஒப்புதல்

புதுடெல்லி, மே 22- தமிழ்நாட்டில்உள்ள பெரியாறு வைகை நீர்பாசன திட்டத்திற்கு 350 லட்சம் டாலர் கடன் தொகை வழங்க சர்வதேச வளர்ச்சி சங்கம ஒப்புதல் அளித்துள்ளது.

பெரியாறு, வைகை நீர்ப்பாசன திட்டத்திற்காக 1984ஆம் ஆண்டுக்கு மொத்தம் 350 லட்சம் டாலர் (ஒரு டாலர் 11 ரூபாயாகும்) கடன் தொகை வழங்க சர்வதேச வளர்ச்சி சங்கம் முடிவு எடுத்துள்ளது.

நெல் விளைச்சலைப் பெருக்கும் நோக்கத்துடன் இந்த திட்டத்தை உலக வங்கி முதலில் ஆதரித்தது.

இந்த புதியதிட்டத்தின் முதல் கட்ட பணியாக தண்ணீர் வீணாவதைக் குறைக்க முயற்சிகள் எடுக்கப்பட்டன.

1977-ஆம் ஆண்டில் இத்திட்டப் பணிக்காக மேற்படி சர்வதேச சங்கத்திடமிருந்து 230 லட்சம் டாலர் பெறப்பட்டது.

பெரியாறு திட்டத்தில் சுமார் 380 வினியோக வாய்க்கால்களில் இருபுறங்களிலும் சிமெண்ட் கான்கிரிட் சுவர்கள் எழுப்பப்படும் சுமார் 180 பெரிய குளங்கள் சீர்படுத்தப்படும்.

நூற்றாண்டு காலப் பெருமையுடைய பேரணை மாற்றுக் கால்வாய்கள் பழுது பார்க்கப்பட்டு சீரமைக்கப்படும்.

தானியங்கள் வீணாவதைக்குறைக்க சுமார்600 நெல் கதிரடி கான்கிரீட் தளங்கள் நிறுவப்படும்.

மேற்கு வங்க இடைத்தேர்தல்

## இ. காங்கிரஸ் வெற்றி

சல்கத்தா, மே. 22- மேற்கு வங்காளத்தில் நடைபெற்ற இடைத்தேர்தலில் பெல்காசியா (மேற்கு) தொகுதியை இந்திரா காங்கிரஸ் கைப் பற்றியது.

இத்தொகுதியில் போட்டியிட்ட இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் அமரேந்திரநாத்பட்டாக் சார்ஜி, மார்க்சிய கம்யூனிஸ்டு கட்சி வேட்பாளர் லட்சுமிசரண்செனனை காட்டிலும் 3 ஆயிரத்து 113 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி அடைந்தார்.

மராட்டிய

## கலவரத்தில் இறந்தவர்களின் எண்ணிக்கை 110 ஆகஉயர்வு

பம்பாய், மே. 22- மராட்டிய மாநிலத்தில் பிவாண்டி, தானே, கல்யாண்,பம்பாய்பகுதிகளில் மூண்ட கலவரத்தில் உயிர் இழந்தவர்களின் எண்ணிக்கை 110 ஆக உயர்ந்தது.

இக்கலவரத்தில் 300-க்கும் அதிகமானவர்கள் காயம் அடைந்தனர் 10 ஆயிரத்துக்கும்அதிகமான மானவர்கள் வீடிழந்து அவதிப்படுகிறார்கள். அவர்கள் 10 முகாம்களில் தங்க வைக்கப்பட்டுள்ளனர்

கலவரப்பகுதிகளில் அமைதி ஏற்படுத்துவதில் ராணுவம் முனைந்துள்ளது.

பிவாண்டியில்தொடர்ந்து ஊரடங்கு உத்தரவு அமலில் உள்ளது.

கலவரப் பகுதிகளைமத்திய உள்துறை அமைச்சர் பி. சி. சேத்தி, பிரதமர் இந்திராகாந்தி ஆகியோர் நேரில் சென்று பார்வையிட்டனர்.

கலவரப்பகுதிகளில் மீண்டும் சகஜ நிலை திரும்ப பொது மக்களும், அரசியல் கட்சிகளும் ஒத்துழைக்க வேண்டும் என்று பிரதமர் இந்திரா காந்தி கேட்டுக் கொண்டார்.

## பிறப்பு

சென்னை 48 - வது வட்ட கழகச் செயலாளர் கு. கஜேந்திரபாபுவின் துணைவியார் மருத்துவமனையில் ஆண் குழந்தை பெற்றெடுத்தார். தாயும் சேயும் நலமுடன் இருக்கிறார்கள்.

# மேற்கு வங்காளத்தில் பயங்கரரயில் விபத்து: 12 பேர் நசுங்கிச்சாவு

கல்கத்தா மே. 22- அவுரா ரெயில் நிலையம் அருகே ஏற்பட்ட பயங்கர ரெயில் விபத்தில் 12 பேர் கொல்லப்பட்டனர் மற்றும் 26 பேர் படுகாயம் அடைந்தனர்.

மேற்குவங்காளத்தில் அவுரா ரெயில் நிலையத்திற்கு சற்று தள்ளிகாசிபா யார்டு (ரெயில்களை நிறுத்தி வைக்கும் இடம்) உள்ளது.

இந்த யார்டுக்கு கொஞ்சம் தூரத்தில் தாரகேஸ்வர் பாசஞ்சர் ரெயில் நின்று கொண்டிருந்தது. அப்போது திடீரென்று ஷியோராபுலி பாசஞ்சர் ரெயில் வேகமாக பின்னால் வந்து மோதியது.

இந்த விபத்தில் பல ரெயில் பெட்டிகள் நசுங்கிவிட்டன. சில ஒன்றின் மேல் ஒன்று ஏறி நின்றன.

காலை 7-30 மணிக்கு ஏற்பட்ட இந்த பயங்கர விபத்தில்12பேர்கொல்லப் பட்டனர், 26 பேர் படுகாயம் அடைந்தனர்

ரெயில் பெட்டிகளை 'காஸ் வெல்டிங் செய்து துண்டித்து பயணிகளை வெளியே மீட்கவேண்டியதாயிற்று.

ஊழியரின் தவறேவிபத்துக்குக் காரணம் என்று சொல்லப்படுகிறது.

சென்ற ஆண்டிலும் இதே இடத்தில் இதே போன்ற விபத்து இதே ரெயில்களால் ஏற்பட்டு அதில் 16 பேர் கொல்லப் பட்டனர்.

இதையொட்டி டிரைவர் காபினில் 2 பேர் இருக்க வேண்டும் என்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

ஆனால் இந்த உத்தரவு பின்னர் வாபஸ் பெறப் பட்டது. இதனை மத்திய ரெயில்வே அமைச்சர் ஏ.பி. ஏ. கனிகான் சௌத்திரி கடுமையாகக் கண்டித்தார்.

## அண்ணா நகர் தொகுதி: முடிவு விவரம்

சென்னை, மே. 22 அண்ணாநகர் சட்ட மன்ற தொகுதி வாக்குகள் எண்ணப்பட்டு இன்று காலை 9-15 மணிக்கு அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டது

மொத்த வாக்காளர் 1,9?,431
பதிவானவை 1,24,648
செல்லாதவை 1739
சோ. மா. ராமச்சந்திரன் (திமுக) 05 341
பி. எல். ராதாகிருஷ்ணன் 55 970

இந்த தொகுதியில் திமுக. வெற்றிபெற்றுள்ளது.

முன்பைவிட வாக்குகள் குறைந்தன:

## ஆந்திராவில் தெலுங்கு தேச கட்சி வெற்றி

விஜயவாடா, மே 22- ஆந்திராவில் பண்டார் தொகுதியில் நடந்த இடைத்தேர்தலில தெலுங்கு தேசக் கட்சி வேட்பாளர் தன்னை எதிர்த்து நின்ற இந்திரா காங்கிரஸ் வேட்பாளரைவிட 13 ஆயிரத்து 337 ஓட்டுகள் வித்தியாசத்தில வெற்றி பெற்றார்

ஆனால் இது சென்ற ஆண்டைக் காட்டிலும் குறைவான வாக்குகளே ஆகும்.

1983ல் நடந்த பொதுத் தேர்தலில் இதே தொகுதியில போட்டியிட்ட தெலுங்குதேசகட்சி வேட்பாளர் 25 ஆயிரத்து 341 ஓட்டுகள் வித்தியாசத்தில் தனனை எதிர்த்து நின்றவரை தோற்கடித்தார்.

ஆசிப்நகர் தொகுதியில திடீரென்று ஏற்பட்ட கலவரத்தால் ஒரு சில வாக்குச் சாவடிகளில் நிறுத்தி வைக்கப்பட்ட வாக்குப்பதிவு இன்று காலை 10 மணியிலிருந்து மாலை 4 மணிவரை நடைபெறும் என்று அறிவிக்கப் பட்டுள்ளது.



PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor: E. PARASURAMAN

## தமிழ்நாடு அரசு பரிசுசீட்டு குலுக்கல் முடிவுகள்

### 143-வது குலுக்கல் முடிவுகள்

தேதி: 20-5-84 இடம்: ராஜாஜிஹால் அரசினர் தோட்டம் சென்னை-2

OV வரிசை - OW வரிசை

முதற்பரிசு: ரூ. 1,00,000
716639 (நாமநாதபுரம்) | 802600 (திருநெல்வேலி)

இரண்டு ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 1,000
8[illegible]60 - 7[illegible]6639

2 இரண்டாவது பரிசுகள் ரூ 10,000/- தலா
032517 மதுரை | [illegible]72596 சென்னை
86[illegible]02 சென்னை | 834408 செங்கல்பட்டு

ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 500
072596 834408 | 032517 365002

2 மூன்றாவது பரிசுகள் ரூ. 5000/- தலா
145157-(தஞ்சாவூர்) | 364854-(சென்னை)
817918 (திருநெல்வேலி) | 398226-(மதுரை)

ஆறுதல் பரிசுகள் தலா ரூ. 250-
364854 398226 | 145157 817918

நாற்பது நான்காவது பரிசுகள் தலா ரூ.1000/-
(கீழ்க்கண்ட ஐந்து எண்களைக் கடைசியாகக் கொண்டு முடியும் டிக்கெட்டுகளுக்கு)
06037 36279 | 09845 61379
36082 48791 | 52861 81018

ஐம்பது ஐந்தாவது பரிசுகள் தலா ரூ 500/-
(கீழ்க்கண்ட ஐந்து எண்களைக் கடைசியாகக் கொண்டு முடியும் டிக்கெட்டுகளுக்கு)
17209 2[illegible]790 87501 | 15021 42531 85732
17931 61347 | 23415 77559

முந்நூறு ஆறாவது பரிசுகள் தலா ரூ. 100
(கீழ்க்கண்ட நான்கு எண்களைக் கடைசியாகக் கொண்டு முடியும் டிக்கெட்டுகளுக்கு)
3809 4759 | 1734 9604
7279 | 9887

அறுநூறு ஏழாவது பரிசுகள் தலா ரூ. 50
(கீழ்க்கண்ட நான்கு எண்களைக் கடைசியாகக் கொண்டு முடியும் டிக்கெட்டுகளுக்கு)
1084 5416 7429 | 0887 6453 7767
2951 5490 9538 | 1639 7465 9117

பத்தாயிரம் எட்டாவது பரிசுகள் தலா ரூ. 10
(கீழ்க்கண்ட இரண்டு எண்களைக் கடைசியாகக் கொண்டு முடியும் டிக்கெட்டுகளுக்கு)
47 | 36

பத்தாயிரம் ஒன்பதாவது பரிசுகள் தலா ரூ. 5
(கீழ்க்கண்ட இரண்டு எண்களைக் கடைசியாகக் கொண்டு முடியும் டிக்கெட்டுகளுக்கு)
27 | 92

விற்பனையாளர்களுக்கான சிறப்பு குலுக்கல் முடிவுகள்:—
இரண்டாயிரம் பரிசுகள் ரூ. 5 தலா
கீழ்க்கண்ட ஒரு எண்ணில் முடியும் டிக்கெட் புக் ரேப்பர்களுக்கு தலா ரூ. 5 பரிசு வழங்கப்படும்.
8 | 2

பரிசுத்தொகை பெற விண்ணப்பிக்கவேண்டிய கடைசித் தேதி—
அரசாங்க கருவூலங்களில்: 17—8—1984
தமிழ்நாடு பரிசுச்சீட்டு ஆணையர் அலுவலகத்தில் 15—11—1984

140-வது பம்பர் குலுக்கல் சேலத்தில் 20-4 84 அன்று நடைபெறுவதற்கு பதிலாக 25 5-84 அன்று நடைபெறும்.

144-வது குலுக்கல் தேதி: 30 5-84 அன்று காலை 10-30 மணிக்கு சென்னை-2 ராஜாஜி ஹாலில் நடைபெறும்.



## உப்பிலியாபுரம் தொகுதி:

# கழக வேட்பாளர் திருமதி சரோஜா மாபெரும் வெற்றி

### மிகப்பெரும் வித்தியாசத்தில் தி. மு. க. தோல்வி

**திருச்சி. மே. 22. உப்பிலியாபுரம் தொகுதியில் கழகம் மாபெரும் வெற்றியைப் பெற்றுள்ளது. கழக வேட்பாளர் திருமதி சரோஜா 59,465 வாக்குகள் பெற்று வெற்றி பெற்றார்.**

இந்த தொகுதியில் திமுக. வேட்பாளரை விட திருமதி சரோஜா 16,721 வாக்குகள் கூடுதலாகப் பெற்று வெற்றிபெற்றார்.

உப்பிலியாபுரம் இடைத் தேர்தலில் 20-ம் தேதியன்று வாக்குப்பதிவு நடைபெற்றது. நேற்று இந்த தொகுதியில் வாக்கு எண்ணிக்கை நடந்தது. வாக்குகள் எண்ணிக்கை துறையூர் நகரசபை மேல்நிலைப்பள்ளி கட்டிடத்தில் நடந்தது.

வாக்கு எண்ணிக்கை துவங்கியதில் இருந்தே கழக வேட்பாளர் திருமதி சரோஜா முன்னணியிலேயே இருந்துவந்தார்.

மிகப் பெரும் வித்தியாசத்தில் கழக வேட்பாளர் சரோஜா வெற்றி அடைந்தார் என்று நேற்று இரவு அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்பட்டது.

## ஓட்டு விவரம்

மொத்த வாக்குகள் 1,33,984
பதிவானவை 1,05,175
செல்லாதவை 2,127
கழக வேட்பாளர் திருமதி சரோஜா 59,465
ஆர் தங்கராஜ் (தி. மு. க.) 42,744
தேவிகவுண்டர் (சுயே) 543
ஓ கே. பெருமாள் (சுயே) 296

16,721 வாக்குகள் வித்தியாசத்தில் கழக வேட்பாளர் திருமதி சரோஜா தி. மு. க. வேட்பாளரை தோற்கடித்தார்.

உப்பிலியாபுரம் தொகுதியில் 1980-ம் ஆண்டில் நடந்த தேர்தலில் கழக வேட்பாளர் அரங்கராசன் வெற்றிபெற்று இருந்தார்.

இவரது தேர்தல் செல்லாது என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்ததால் இடைத் தேர்தல் நடந்தது.

இப்போது நடந்த இடைத்தேர்தலில் கழகம் இந்தத் தொகுதியில் மாபெரும் வெற்றியைப் பெற்றுள்ளது.



## திருப்பதி ஏழுமலையானுக்கு

# பக்தர்தந்த தேன்பாட்டிலை திருடியவர் பிடிபட்டார்

திருப்பதி, மே. 22— ஏழுமலையானுக்கு அபிஷேகம் செய்வதற்காக பக்தர் ஒருவர் ஒரு தேன் பாட்டிலை தந்தார் அதை திருடியவர் மாட்டிக் கொண்டார்.

அந்த தேன்பாட்டிலை கோவிலில் ஆய்வாளராக பணிபுரியும் ஒருவர் தன்னுடைய வீட்டிற்கு எடுத்து செல்ல முற்பட்டார்.

சந்தேகத்தின் பேரில் அவரை கண்காணிப்பு அதிகாரி சோதனையிட்டதில தேன் பாட்டில் சிக்கியது.

இதையடுத்து ஆய்வாளர் தற்காலிக வேலைநீக்கம் செய்யப்பட்டார்.

இந்த மாதத்தில் இப்படி திருடி மாட்டிக் கொண்டவர்களில் ஆய்வாளர் மூன்றாமவர் ஆவார். ஏற்கனவே 2 ஊழியர்கள் உண்டியல் வசூலை எண்ணும் போது திருடியதாக சஸ்பெண்ட் செய்யப்பட்டனர்.

## மயிலாடுதுறையில்

# தி.மு.க.வினர் வன்முறை: கழகத்தோழர் மனைவிமீது தாக்குதல்

### சைக்கிள்களை உடைத்து நொறுக்கினர்

**மயிலாடுதுறை, மே 22. மயிலாடுதுறையில் தேர்தல்முடிவு அறிவிக்கப்பட்டவுடன் தி. மு. க. வினர் நகரெங்கும் வன்முறை வெறியாட்டத்தில் ஈடுபட்டனர்.**

மயிலாடுதுறையில் கடந்தசில நாட்களாகவே தி. மு. க. வினர் பயங்கர வன்முறை வெறியாட்டத்தில் ஈடுபட்டுள்ளது தெரிந்ததே.

திமுகவை சேர்ந்த நகர செயலாளர், மாவட்ட செயலாளர் ஜோன்றோரின் தூண்டுதலின் பேரில் திமுகவினர் பயங்கர ஆயுதங்களுடன் நகரில் பவனி வந்தனர்.

தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்டவுடன் தி.மு.க. வினர் கூட்டம் கூட்டமாக சென்று வன்முறையில் ஈடுபட்டனர்.

மயிலாடுதுறை ஒன்றியத்தைச் சேர்ந்த சோழ சக்கரநல்லூரில் கழகத் தோழர் அன்சாரியை தாக்கி அவர் வைத்திருந்த சைக்கிளை அடித்து நொறுக்கினர்.

அன்சாரியின் வீட்டிற்குள் புகுந்து அவரது மனைவி மும்தாஜையும் தாக்கியுள்ளனர்.

கழக தேர்தல் அலுவலகம் முன்பும் தி. மு. க. வினர் கும்பலாக வந்து ஆபாசமாகப்பேசினார்கள்.

தி. மு. க.வினரின் வன்முறைகள் குறித்து போலீசில் புகார்செய்யப்பட்டுள்ளது.

# நுங்கு திருட சென்ற வாலிபர் துப்பாக்கிசூட்டிற்குபலி

**சென்னை; மே 22- நுங்கு திருடச்சென்ற வாலிபர் ஒருவர் காவலாளியின் கைத் துப்பாக்கிக்கு பலியாகியுள்ளார்.**

சென்னையை அடுத்த தாம்பரம் அருகேவிமானப் படை பகுதிக்கு சொந்தமான பகுதி உள்ளது. இந்தப்பகுதி பாதுகாக்கப்பட்ட பகுதியாக அறிவிக்கப்பட்டு அந்தப் பகுதிக்குள் யாரும் நுழையவும் முடியாது. இந்த பகுதிக்குள் ஏராளமான பனைமரங்கள் உள்ளன. அவற்றில் ஏராளமான நுங்குகள் காய்த்து தொங்கியது. நுங்கு திருடுவதற்காக தாம்பரத்தை அடுத்த ராஜேந்திரன், சேகர், நந்து, அரிஹரன் ஆகியோர் அந்தப் பகுதிக்குள் நுழைந்து பனை மரத்தில் ஏறி நுங்குகளைத்திருடினராம் இவர்கள் நுங்கு திருடுவதை காவலாளி தயாசந்த் பார்த்து விரட்டவே ராஜேந்திரனும் மற்றும் அவரது கூட்டாளிகளும் தப்பித்து ஓட முயன்றுள்ளனர். உடனே தயாசந்த் தன்கைத் துப்பாக்கியை எடுத்துச் சுடவே துப்பாக்கிக்குண்டு ராஜேந்திரன் வயிற்றில் பாய்ந்தது.

பலத்த குண்டு காயத்திற்கு ஆளான ராஜேந்திரன் ரத்த வெள்ளத்தில்மயங்கி விழுந்தார். உடனே அவரை சிகிச்சைக்காக குரோம்பேட்டை ஆஸ்பத்திரியில் போலீசார் சேர்த்தார்கள். சிகிச்சை பலனளிக்காது ராஜேந்திரன பரிதாபமாக செத்தார்.

இந்த சம்பவம் குறித்து போலீஸ் சூப்பிரண்டு ஜி எஸ் ரமணன் உத்தரவின் பேரில் துணைசூப்பிரண்டு தாகூர்பால் இன்ஸ்பெக்டர் ராமச்சந்திரன் ஆகியோர் விசாரித்து வருகிறார்.

## திருமணம்

கே. எம் முகமது அப்துல் காதர் நிறுவனங்களின் உரிமையாளர்களில் ஒருவரான கே. எம் முகமது அப்துல் கனியின் மகள் குர்ஷித் பானுவிற்கும் காதர்மொய்தீனுக்கும் திருமணம், திண்டுக்கல் டவுன் பொய்யப ள்ளி வாசலில் சிறப்பாக நடந்தது.

இப்ராஹிம், ஜக்கரியா டி சி கே நாயர் ஆகியோர் மணமக்களை வாழ்த்தினர்.

# புதிய தொழிற்சாலை: அமைச்சர் கலைமணி திறந்து வைத்தார்

சென்னை, மே. 22- சென்னை சிட்கோ எஸ்டேட்டில் புதிதாக அமைந்துள்ள 'பைபரஸ்' என்ற தொழிற்சாலையை அமைச்சர் கலைமணி திறந்து வைத்தார்.

ரப்பர் மற்றும் பிளாஸ்டிக் சம்பந்தப்பட்ட பொருட்களை தயாரிக்கும் இத்தொழிற்சாலையின் திறப்பு விழாவுக்கு ஜே சி, டி. பிரபாகரன் எம் எல். ஏ தலைமை வகித்தார். தொழிற்சாலையின் உரிமையாளர் எம்.எம் கிருஷ்ணன் வரவேற்றுப் பேசினார்.



## தமிழ்நாடு பரிசுசீட்டு துறை. சென்னை
### ஒப்பந்த புள்ளி அறிக்கை

(ந.க. எண். ஊ1/3796/84, நாள் : 17.5.1984.)

தமிழ்நாடு ஆளுநருக்காகவும், அவர் சார்பிலும் கீழ்க்கண்ட வேலைக்கு, அதன் சார்பாக நிர்ணயிக்கப்பட்ட அலுவலகப் படிவத்தில், மூடி முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப் புள்ளிகள், தமிழ்நாடு பரிசுசீட்டு ஆணையர் அவர்களால் அரசினர் தோட்டம், சென்னை-600 002ல் அமைந்துள்ள அவரது அலுவலகத்தில் 30.6.84 அன்று பிற்பகல் 3.00 மணி வரை ஏற்றுக்கொள்ளப்படும்.

முத்திரையிடப்பட்ட உறையில் அடங்கிய விவரங்கள் மற்றும் குறிப்பிடுகைகள் அதே நாள் 30.6.84 மாலை 4 மணிக்கு தமிழ்நாடு பரிசுசீட்டு ஆணையரால் (அல்லது அவரது அனுமதிபெற்ற அதிகாரியால்) வருகை புரிந்துள்ள ஒப்பந்தக்காரர்கள் (அல்லது அவரது அனுமதிபெற்ற பிரதிநிதிகள்) முன்னிலையில் தலைமைச் செயலகத்தில் அமைந்துள்ள அவரது அறையில் திறக்கப்படும்.

| வேலையின் பெயர் | எண்ணிக்கை விவரம் | முன்வைப்புத் தொகை | கால அளவு |
|---|---|---|---|
| தமிழ்நாடு பரிசு சீட்டுக்களை வண்ணத்தில் அடிக்கட்டையுடன் அச்சடித்தல் | மாதமொன்றுக்கு ஒரு கோடி எண்ணங்களும் அல்லது அதற்கு மேலும் | ரூ. 1,00,000 (ரூபாய் ஒரு லட்சம் மட்டும்) | துறையில் அவ்வப் பொழுது நிர்ணயிக்கும் வகையில் |

ஒப்பந்தப் புள்ளிப் பத்திரத்தின் விலை ரூ. 100/- (ரூபாய் நூறு மட்டும்) இத்துடன் விற்பனை வரி 2 சதமும், சர்சார்ஜ் 2 சதமும் செலுத்த வேண்டும். இத்தொகை திருப்பித் தரமாட்டாது. தபாலில் பெற தனியாக ரூ. 10/- அனுப்ப வேண்டும். இத்தொகையினை, பணவிடை, ரொக்கம் அல்லது போஸ்டல் ஆர்டர் மூலம் செலுத்தலாம்.

பத்திரம் வழங்கப்படும் நாள் : 1.6.84 முதல் 25.6.84 வரை
(காலை 11.00 மணி முதல் மாலை 4.00 மணி வரை)
(அலுவலக நாட்களில் மட்டும்)
*ஒப்பந்தப் புள்ளி விவரங்கள் கிடைக்குமிடம் :*
*கணக்கு அலுவலர், தமிழ்நாடு பரிசுசீட்டு துறை.*
*அரசினர் தோட்டம், சென்னை-600 002.*

அஞ்சல் மூலம் பெறப்படும் ஒப்பந்தப் புள்ளிகள், அலுவலகத்திலிருந்து அனுப்பும் போதோ, அலுவலகத்தில் பெறப்படும்போதோ, காலந்தாழ்ந்து கிடைக்கப் பெற்றால் இத்துறை பொறுப்பேற்காது. பூர்த்தி செய்யப்பட்டு உரிய வேலையின் பெயரை உறையின் மேல் எழுதி மூடி முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப் புள்ளிகள், குறித்த நாள் மற்றும் நேரத்துக்குள் கிடைக்கப்பெற வேண்டும். சொந்தத்தில் அனைத்து வசதிகளும் பொருந்திய லித்தோ அச்சகம் உடையோரும், அச்சுத் துறையில் குறைந்தபட்சம் மூன்று ஆண்டு கால அனுபவம் உடையவரும் தக்க நிதி வசதியுடையோரும் மட்டுமே ஒப்பந்தப் புள்ளி சமர்ப்பிக்கலாம்.

டேவணி தொகையான ரூபாய் ஒரு லட்சத்திற்கு ஷெட்யூல்ட் வங்கியிலிருந்து பெறப்பட்ட டிராப்ட், தமிழ்நாடு பரிசுசீட்டு ஆணையர் பெயரிலிருந்தால் தான் ஏற்றுக் கொள்ளப்படும். வேறு எந்த விதமாக செலுத்தினாலும் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. முன் வைப்புத் தொகையைச் செலுத்தாமல் அனுப்பப்படும் விலைதாரணைகள் பரிசீலிக்கப்படாமல் முழுவதுமாக நிராகரிக்கப்படும். எந்தவொரு ஒப்பந்தப் பத்திரத்தையோ அல்லது எல்லா ஒப்பந்தப் பத்திரங்களையோ முழுவதுமாகவோ அல்லது பகுதியாகவோ எந்த ஒரு காரணமும் காட்டாமல் ஒப்புக்கொள்ளவும் அல்லது நிராகரிக்கவும் தமிழ்நாடு பரிசுசீட்டு ஆணையருக்கு முழு உரிமையும், அதிகாரமும் உண்டு.

ஆணையர்

DIPR 217/84 (R)